உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# "பாழையென்னுஞ் சொல்வழக்கு."

மொழி நூலில் பாஷையென்னுஞ் சொல்லுக்குப் பாழையென்னுஞ் சொல்லை வழங்கியிருப்பது நன்றாக இல்லையென்றும் அது கூடாதென்றும் கூறுவர் ஒருசாரார்.

பாஷையென்பது வடசொல்லாதலால் தமிழ்ப்பாடையெனின் அது அமங்கலப்பொருளையும் தருதலால் தமிழ்ப்பாஷை தமிழ்ப்பாடையென்னும் இருவகை உச்சரிப்பினும் தமிழ்ப்பாழையென்னும் உச்சரிப்பே நவின்றோர்க் கினிமை பயத்தல் முதலிய அழகு உடையதாகு மென்பர் ஒருசாரார். சிவ ஞான முனிவர் முதலோர் பாஷையென்பதற்கு மொழியென்று வழங்கி யிருக்கின்றார்கள். அவ்வழக்குப்படி மொழி நூலெனக் கூறப்பட்டுள்ளது.

தமிழ்மொழியெனின் தடை கூறுவார் ஒருவருமிலர். தமிழ்ப்பாழை யெனின் தடை கூறுவார் சிலருளராகின்றனர். அவரும் அச்சொல்வந்த காரணமுதலியன உணருவாராயின் அன்பு கூர்ந்து மகிழ் கூர்ந்து இனிதுடன் படிவராவர்.

தடை = ஆட்சேபம் தேவாரத்தில் பழந்தக்கராகம், பழம்பஞ்சுரம், நட்டபாடை, நட்டபாஷையென்னும் பண்கள் வந்திருக்கின்றன.

பழந்தக்கராகம் - 3 - பதம்
பழம்பஞ்சுரம் - 2 - பதம்'
நட்டபாடை - 2 - பதம்
பழம் + பஞ்சுரம்
பழம் = இசை

பல் - பள் = இசை, பள்ளர் = உழவர், இசைபாடி உழுவோரென்பது பொருள். பள் - பளம் இசை, ஒலி

பல்லி பள பளெனச் சொல்லிற்று, பளீரென அடித்தான்.
பளம் - படம் = இசை, படபடென்ப் பேசினான்.
“படமலி தமிழிவை பரவ வல்லவர்"

(திருவிடை மருதூர் ச - தே)

படம் - படகம் = ஓர்வாச்சியம். இசைப்ப தென்பது பொருள்

"கத்தரிகை துத்தரிகறங்கு துடி தக்கையொடு இடக்கை படகம்" (திருவேதவனம் ச - தே)

தக்கம் - தக்கை = ஓர்வாச்சியம்
பளம் - பழம் = இசை
இப்பழமென்னும் சொல்லுதான் பாழையாயிற்று

பழம் - பாழை = இசை, மொழி,
நட்டபாழை நட்டபாடையாயிற்று,
நட்டபாடை நட்டபாஷையாயிற்று,
நட்டபாஷை யென்பது நட்டபாடையாயிற் றெனல் கூடாது.

ஈண்டுப்பாஷை யென்பது பண்ணெண்க. சித்தர்களும் பரிபாழை என்பர். மதுரைக்கலம்பகத்து உரையிலும் ஓரிடத்துப் பாஷையென்னும் சொல் வந்திருக்கின்றது, உள்ளது நாற்பதிலும் உள்ளது..

இனிழகரம் டகரமாதல் இலக்கண முறைமையா? ஷகரம் டகரமாதல் இலக்கண முறைமையா? எனின் ளகரம் டகரமாதலாலும் ழகரம் ளகரத்தி னின் றுண்ட்ானபடியாலும் ளகரம் டகரமாதல் போல் ழகரமும் டகரமா கும்..

உ - ம்

"திகடரு சடைமுடி யடிகள் "
(திருச்சேறை ச - தே)
திகழ் + தரு = திகடரு
"திகடசக்கர "
திகழ் + தசக்கர = திகடசக்கர
ஷகரம் டகரமாகுமா?

ஷகரத்துக்கும் டகரத்துக்கும் சம்பந்தம் உண்டா எனின் ச, பீ, ஸ, ஷ, இவை ஒன்றுக்கொன்று சம்பந்தமான எழுத்தான படியால் அச்சம்பர் தத்தின் படியே பாஷையென்பது பாசையாகும். பாடையாகமாட்டாது. டகரத்தில் தகரமிருக்கின்றபடியாலும் வித்து விச்சு முதலியன போலத் தகரத்துக்கும் சகரத்துக்கும் சம்பந்த மிருக்கின்றபடியாலும் அதன்படி பாடையென்பது பாஷையாகும்.

† ள் + த = ட

† மொழி நூல் இலக்கணவியல் 12 - ம் பக்கம் மெய்ச்சந்தி எழுத்து காண்க.

ளகரமும் தகரமும் சேர்வதால் டகரமுண்டாயது, இதனால் சகரமும், டகரமும் ஷகரமாகு மென்பதும், டகரம் ழகரமாகாமைபோல ஷகரம் டகர

மாகாதென்பதும், விளங்குமாறு காண்க. ஷகரவுச்சரிப் புடைய சொற்களின் சிதைவெனல் வேண்டும்.

ழகரம் டகரமாகும் டகரம் ழகரமாகாது ஷகரமாகும்.

உ - ம்

புழலை - புடலை
வேடம் - வேஷம்

இன்னும் கண்டகம் கந்துகமாகும், பிண்டிபாலம் பிந்திபாலமாகும் கந்துகம் கண்டகமாகாது, பிந்திபாலம் பிண்டிபால மாகாது. ட, ண, ள, ழ, என்பவை நடுநாக்கானது மேல்வாயின் நடுவைப் பொருந்துதலால்'உண்டாதலாலும் ஷகரமும் அவ்விலக்கண முடைமையானும் டகரம் ஷகர மாகும்.

இவ்வாராய்ச்சியால் பழமென்னும் இசையின் பெயர் பாழையாயிற் றென்றும் பாழை பாடையாயிற்றென்றும் பாடைபாஷையாயிற் றென்றும் கொள்ளவேண்டும்.

இன்னும் ஷகாரமென்னும் எழுத்துச் சத்தசுரங்களுண்டான காலத் துக்குப் பிறகே உண்டாயின் தென்பர். அஃதுண்மையே * "சரிகமபதநி"

* மொழி நூல் பாயிரவியல் 65 - ம்பக்கம் காண்க.

என்னும் சத்தசுரங்களும் சட்சமுதலிய வற்றின் முதலெழுத்தாலால் இ. சுரங்களுண்டான காலத்தில் சட்டி, சட்டம் என்னும் உச்சரிப்புதான் இருந்ததெனப் புலனாகின்றது.

சட்சம் ஸட்சம் "ஸரிகமபதநி'

ஷட்சம் என்னும் அதாவது ஷகாரவுச்சரிப்பு அக்காலத்திருக்கு மானால் ஷட்சமென்பதன் முதலெழுத்து ஷகரமாதலால் " ஷரிகம தமி'என் றிருத்தல் வேண்டும்.'இனி ஷ, ஸ, யோரபேதமெனினும் சங்கீதம் புலவர்கள் ஒப்பமாட்டாராதலால் அதுவும் பொருந்தாது.;

எக்காலத்திலேனும் "ஷரிகமபதநி' என்னும் சுரநடையிருந்ததா ஆராய்ந்து கூறுக. இதனால் ஷகரமானது சத்தசுரங்களுண்டான காலத்துக்குப் பிறகு ஸகரத்தினின்று உண்டான எழுத்தே யென்பது வலியுறு கின்றது. -

ஸ - - ஷ

ஷ ஷி: ஷ ஸ0 என்பன பிற்காலத்து வழக்கு.

## பாழையென்னுஞ் சொல்வழக்கு

ஷகாரம் டகாரமாவதற்கு இலக்கண முறைமையில்லை. இனிப்பாழி பாழையாயிற்றெனலும் ஒக்கும் பாழி = குகை குகையிலுண்டான தென்பது பொருள் இது பொருந்தக் கூறலென்னும் உத்தி இகரம் ஐகாரமாகும் முசலி முதலை மென்பதுபோல, பாழையென்னும் சொல் வந்தகாரண முதலியன அறிந்து கொள்க

பழந்தக்கராகம், பழம்பஞ்சுர மென்பவற்றுள் பழமென்பதற்கு வெறுபொருள் கூறுவர் அது பொருந்து மாறில்லை.

மாகறல் - கார்த்திகேய முதலியார்.

சித்தாந்தம் - 1916 ௵ - ஆகஸ்டு ⸻